ரூ 3.50

# மக்கள் சிந்தனை

திருவள்ளுவராண்டு 2037
சித்திரை - ஏப்ரல் 2006

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## திருக்குறள் பேரவை நடத்தும் 100 வது சிந்தனை நந்தவனம்

குன்ற[illegible] ஆதீனம், குன்றக்குடி.



கோவிலூர் மடாலயம்
2/4
கோவிலூர்-630 307

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :
*நிர்வாகி,*
**மக்கள் சிந்தனை**
குன்றக்குடி - 630 206
தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்
**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | | | |
|---|---|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | | மாதம் | : சித்திரை |
| மலர் | : 20 | இதழ் | : 4 |

KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
45716




# தமிழ்ப் புத்தாண்டு மலரட்டும்!

இனிய தமிழ்ப் புத்தாண்டு மலர்ந்துள்ளது. இயற்கையின் இனிய வாழ்த்துக்களோடு தமிழ்ப் புத்தாண்டு தொடங்கியுள்ளது. தமிழர்கள் தங்களின் பண்பாட்டுத் தடம் மாறாமல் பயணம் செய்கின்றார்களா? தொன்மையும் நன்மையும் வாய்ந்த தமிழர் நாகரீகம் என்ன ஆயிற்று? இன்று உடை நாகரீகத்திலும் நாம் தமிழர்களாக இல்லை! உணவுப் பழக்கத்தாலும் நாம் தமிழர்களாக இல்லை! உணர்வாலும் நாம் தமிழர்களாக இல்லை. நம் வீட்டுப் பண்பாடு காற்றில் கரைந்த கற்பூரமாய்க் கரைந்து தம் கடைசிமூச்சை வாங்கிக் கொண்டிருக்கின்றது. அம்மாவும் அப்பாவும் ஆகாத அம்மியும் ஆட்டு உரலுமாய் மூலையில் கிடத்தப்பட்டு மம்மியும் டாடியுமாய் மறுபிறப்புச் செய்துள்ளனர். அறிமுகம் இல்லாதவர்கள் கூட அன்பு முகத்துடன் வரவேற்று உபசரித்து விருந்தோம்பிய வீட்டுத் திண்ணைகள் இன்று காணாமல் போயின. அந்தி சாய்கின்ற நேரத்தில் இன்னார்-இனியார், நல்லார் - தீயார் என்று பேதம் பாராது அனைவருக்கும் அடைக்கலம் தந்த நம் வீடுகளின் விருந்தோம்பும் பண்பு என்னாயிற்று? வளர்ந்து வரும் சிற்றுண்டிச் சாலைகளும் விடுதிகளும் எதைக் காட்டுகின்றன? நம் செல்வத்தின் செழுமையையா? அல்ல! அல்ல! நம்மிடமிருந்து விருந்தோம்பும் பண்பு விடைபெற்று விட்டதையே காட்டுகிறது!

சக மனிதர்களை நேசிக்கின்ற அன்பு குறைந்து விட்டது. உலகத்தையே தன் உறவாகப் பார்த்த தமிழன், தன் உறவுகளையே அந்நியமாக்கிக் கொண்டு தனிமைத் தீவில் தவித்துக் கொண்டிருக்கின்றான். இன்று தமிழனிடம் அடையாளம் இருப்பது அவன்

மொழி மாத்திரமே! அதையும் கலப்படமின்றிச் சுத்தமாக வைத்திருக்கவில்லை. அதிலும் கலப்படம்! அந்நியச் சொற்களின் ஆதிக்கம்! படிப்புக்கும் வாழ்க்கைக்கும் முரண்பாடுகள்! பல நேரங்களில் கற்ற கல்வி ஏட்டுச் சுரைக்காயாக அமைந்துவிடுகின்றது.

இலண்டனில் உயர் விவசாயப் படிப்புப் படித்து விட்டு வந்த இளைஞர் ஒருவர் உள்ளூரில் ஒரு தோட்டத்தைப் பார்வையிட்டு விவசாயிக்கு ஆலோசனை சொல்கின்றார். இந்தத் தோட்டத்திற்கு என்ன உரம் இடுகின்றீர்கள்" என்று இலண்டனில் படித்த இளைஞர் கேட்க உள்ளூர் விவசாயி சொல்கின்றார். "என் தோட்டத்திற்கு இயற்கை உரம்தான் இடுகின்றேன்" என்று! இலண்டனில் படித்துவிட்டு வந்த இளைஞர் "செயற்கை உரம் இடுங்கள் இந்தத் தோட்டத்தில் மாங்காய்கள் கணிசமாகக் காய்க்கும்" என்கின்றார். அதற்கு உள்ளூர் விவசாயி, "அப்படியெல்லாம் காய்க்காது" என்கின்றார். இலண்டனில் படித்துவிட்டு வந்தவர், கோபமாகச் சொல்கின்றார். "நான் இலண்டனில் படித்துவிட்டு வந்து சொல்கிறேன். நான் சொல்கின்றபடி செய்யுங்கள். மாங்காய்கள் நன்றாகக் காய்க்கும்" என்று! அதற்கு விவசாயி அமைதியாகச் சொல்கின்றார் "இந்தச் செடிகளில் மாங்காய்கள் காய்க்காது, இவையெல்லாம் கொய்யாச் செடிகள்" என்று! கற்பதை வாழ்க்கையில் நடைமுறைப்படுத்த செயற்களத்தில் தோன்றும் சிக்கல்களைத் தீர்க்க முயற்சிக்க வேண்டும்.

முகம் தெரியாத மனிதர்களிடமும் காட்ட வேண்டிய அன்பை, நாம் உடன்பிறந்தவர்களிடம் காட்டுவது போல் காட்டவேண்டும். தொப்புள் கொடியோடு தாயின் உறவு அறுந்து போகலாம். ஆனால், உயிரின் கடைசித் துடிப்பு உள்ளவரை தாய்மொழியோடு உள்ள உறவு அறுந்து போகாமல் காப்போம்! எங்கோ இருப்பவர்களுக்கு எல்லாம் குரல் கொடுக்கும் தமிழன், தன் சொந்தச் சகோதரனைச் சிந்திக்கட்டும்! எங்கும் வலிமையும் அன்பும் இனிமையும் பூத்துக் குலுங்கட்டும்!

மலர்ந்துள்ள புத்தாண்டு
மணம் வீசட்டும்!
அனைவருக்கும் இனிய தமிழ்ப்புத்தாண்டு
நல்வாழ்த்துக்கள்!

பொன்னம்பல அடிகள்

# இயற்கையின் சுழற்சி

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

மண்ணுள்ளே தோன்றி, அந்த
மண்ணையே உணவாய்க் கொண்டு
மண்ணுள்வாழ் உயிர்தான் சின்ன
மண்புழு; அதுவும் ஊர்ந்து
தண்ணீரின் குளத்துள் வந்தால்
தவழ்ந்திடும் கெண்டை மீனோ
மண்புழு தனைவி ழுங்கித்
தன்பசி தீர்த்துக் கொள்ளும்!

உண்டஅக் கெண்டை துள்ளி,
உற்சாக ஆட்டம் போட்டால்,
அண்டையில் அமர்ந்த கொக்கோ
அதைக்கவ்வி விருந்தாய் ஆக்கும்!
உண்டியல் கொண்டே அந்த
உயிர்கொக்கை மனிதன் வீழ்த்திக்
கொண்டாடி உண்பான்; சொந்தக்
கும்பியை நிறைத்துக் கொள்வான்!

உயிர்கொன்றே உடல்வ ளர்க்கும்
உன்மத்தன் செத்துப் போனால்,
அயல்வாழும் உறவோர் கூடி
அவன்உடல் புதைப்பார் மண்ணுள்!
இயல்புடன் அவனை மண்ணே
இரையாக்கிக் கொள்ளும்! ஆய்ந்தால்
வியப்பன்றோ? சக்க ரம்போல்
விதிச்சட்டச் சுழற்சி என்னே?

—

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 62. ஆள்வினையுடைமை

செயல்களை ஆளுமையுடன் செய்யும் திறன் பெற்றிருத்தல். செயல்களின் மயமானது இந்த உலகம். தாமாகவே கூடச் செயல்கள் நிகழும். மலைகளின் வளர்ச்சி - மலைக்காடுகளின் வளர்ச்சி போன்ற நல்ல செயல்களும், மண்ணரிப்பு முதலிய தீமைகளும் செய்வாரின்றியே நிகழும் செயல்கள். ஆயினும், இவை அழகாக பயனுடையனவாக இருப்பதில்லை. அதுபோல் காலமோ தேவைகளோ உந்தும்பொழுது அறிவுணர்வும் ஆளுமையும் இன்றிச் செய்யும் செயல்கள் செயல்கள் போலத் தோன்றும். முழுப்பயன் தரா. ஆதலால் செயல்களைக் குறித்த காலத்தில் குறித்த முறையில் குறித்த பயன்கொள்ளத் தக்க வகையில் செய்வதற்குரிய ஆன்மவலிமை பெற்று வாழ்தல் ஆள்வினையுடையராதலாகும்.

*அருமை உடைத்துஎன்று அசாவாமை வேண்டும்*
*பெருமை முயற்சி தரும்.* (611)

செய்யவேண்டிய பணி அருமையானது, நம்மால் செய்ய இயலாதது என்று தள்ளற்க. அந்தப் பணியைச் செய்ய மேற்கொள்ளும் முயற்சி பெருமையைத் தரும்.

மனித ஆற்றல் வளர்ச்சிக்குரியது. ஆதலால் பணி செய்ய விருப்பமுடைய மனிதனுக்கு அருமையான பணி என்று ஒன்று இல்லை.

செய்யத் தொடங்கிப் பயன்தரத்தக்க வகையில் முடிந்தாலும் முடியாது போனாலும் முயற்சி பெருமை தரும். அற்பக் காரியங்களில் பெறும் வெற்றியைவிடப் பெரிய பணிகளில் பெறும் தோல்வி பாராட்டுதலுக்குரியது.

*வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை*
*தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.* (612)

தொடங்கிய ஒரு பணியைத் தொடர்ந்து செய்து முடிக்காமல் இடையில் விடுதல் பயனைத் தராது. செய்த பணிகளைக் குறையாக விட்டவரை உலகம் விட்டுவிடும்.

தொடங்கிய ஒரு பணியைத் தொடர்ந்து செய்து முடிக்காமல் இடையில் விட்டு விடுவதால் பணியும் முடியாது. பயனும் இல்லை. செய்த பணியளவும் வீணாகிப் பயனற்று இழப்பினையும் அவமானத்தையும் தரும்.

இன்றைய உலகில் வினைக்கண் வினை கெடுத்து நிற்போர் மிகுதி என்பதை உணர்க.

*தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே*
*வேளாண்மை என்னும் செருக்கு.* (613)

எல்லாருக்கும் உதவி செய்தல் என்னும் உயரிய குணம் தளராத தொழில் முயற்சியுடைமையின் கண்ணேயே தங்கும்.

திருக்குறள் தோன்றிய காலத்தில் தொழில் வேளாண்மை, வேளாண்மை செய்து வாழ்க்கை நடத்தியோரிடம் இருந்த பண்பு தொழில் மீதும் ஏற்றிக் கூறப்பட்டது.

பிறர்க்கு உதவி செய்யும் பெற்றியராக வாழ ஆசைப்படுவோர் தளராத உழைப்புடையோராக வாழ்தல் வேண்டும்.

*தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை*
*வாள்ஆண்மை போலக் கெடும்.* (614)

ஆளுமையும் வீரமுமில்லாத பேடி கையில் உள்ள வாளினால் என்ன பயன்? அதுபோல உழைத்துப் பொருளீட்டாதானிடம் உள்ள உதவி செய்யும் குணத்தினால் யாது பயன்? ஒரு பயனுமில்லை.

பேடிகை வாள் பயன்படாமையின் காரணமாகத் துருப்பிடித்து அழியும். அதுபோல, உழைப்பில்லாதவனின் உதவி செய்யும் குணம் பொருளின்மையாலும் வறுமையாலும் அழியும்.

வாள் பயன்படுத்தப் பயன்படுத்தக் கூர்மையாகி வெட்டுந்திறன் கூடுதலாகப் பெறும். அதுபோலத் தளராத உழைப்பில் வளரும் செல்வம் உதவி செய்யும் பண்பை மேலும் மேலும் ஊக்கி வளர்க்கும்.

*இன்பம்விழையான் வினை விழைவான் தன்கேளிர்*
*துன்பம் துடைத்தூன்றும் தூண்.* (615)

இன்பத்தை விரும்பாது தொழிலையே விரும்பி எவன் உழைக்கின்றானோ அவன் தன்னுடைய சுற்றத்தினருடைய துன்பங்களைத் துடைத்து நீக்கித் தாங்கி நிற்கும் தூணாவான்.

இன்பவிழைவு தொழில் முயற்சிக்குக் கேடு தரும். நமது நாட்டில் விடுப்பு என்ற பெரிய நோய் வளர்ந்ததற்குக் காரணம் இன்பமும் வேண்டி நிற்பதே.

தூண் தன்மீது ஏற்றப்பட்ட பாரத்தைத் தாங்கி நிற்பது. அதுபோலத் தம்மைச் சார்ந்தோர் துன்பத்தை நீக்கி அவர்களைத் தாங்கி நிற்றல் சிறந்த முறையில் தொழில் புரிவோரின் இயல்பு.

*முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை*
*இன்மை புகுத்தி விடும்.* (616)

முயற்சி செல்வத்தினை ஆக்கும். முயற்சி இன்மை இல்லாமையில் புகுத்திவிடும். "இன்மை" - வறுமை என்று கூறப்படும். வறுமைக்கு முதற்காரணம் அறிவின்மையும் உழைப்பின்மையுமேயாம். இவற்றையும் வறுமையெனக் கருதுதல் வேண்டும். முயற்சியின் படைப்பே செல்வம். மற்றைச் செல்வங்கள் செல்வங்களாகா. (அதாவது, முயற்சியின்றிச் சுரண்டல் முறையில் குவியும் செல்வம்) முயற்சி என்பது பொருள் நிறைந்த சொல். மிகச் சாதாரணமாகக் கைக்குக் கிடைத்த வேலையைச் செய்வதும் ஏவியதை மட்டும் செய்வதும் வேலையல்ல; முயற்சியும் அல்ல.

இடர்ப்பாடுகளைக் கண்டவுடன் சோர்தலும், தம் இயல்புக்கு அப்பாற்பட்டது என்று செய்யாது விடுதலும் முயற்சியின் பாற்பட்டதாகா. தடைகளைக் கடந்தும் பெரும் பணிகளைப் பொறுப்புடனும் செய்வதே முயற்சியாகும்.

*மடிஉளான் மாமுகடி என்ப மடியிலான்*
*தாள்உளாள் தாமரை யினாள்.* (617)

சோம்பலுடையானை மூதேவி என்பர். சோம்பல் இல்லாதவன் முயற்சியினிடத்தில் திருமகள் இருப்பாள்.

மாமுகடி-மூதேவி. தாமரையினாள் - திருமகள்.

சேற்றில் தோன்றி மலர்தலுக்கு வாய்ப்பில்லாத நீர்ப்பரப்பைக் கடந்து தலையை வெளியே நீட்டி கதிரவன் துணையையும் பெற்று மலர்தல் தாமரை. தாமரை மலர் அயர்விலா முயற்சியின் ஒரு சின்னம். அதனால் திருமகள் அதில் தங்கியிருக்கிறாள். சூழ்நிலையைக் கடந்து பெறவேண்டிய ஒத்துழைப்புக்களைப் பெற்று வளர்ந்தால் பெருஞ்செல்வம் பெறலாம் என்பது கருத்து.

*பொறிஇன்மை யார்க்கும் பழியன்று அறிவுஅறிந்த*
*ஆள்வினை இன்மை பழி.* (618)

ஒருவனின் நல்வாழ்க்கைக்குக் களம், கருவிகள் வாய்க்காமை பழியன்று. அறிவறிந்த உழைப்பின்மையே பழி.

"அறிவறிந்த ஆள்வினை இன்மை" என்றது அறிவியலோடு சேராத உழைப்பு உரிய பயனைத் தராது என்பதனால்.

ஏழையாகப் பிறந்தது இழிவன்று. அறிவறிந்த ஆள்வினைகள் பல இயற்றி வளமுடையவராக வளராமையே பழி.

*தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்*
*மெய்வருத்தக் கூலி தரும்.* (619)

ஒருவருக்கு நல்வாழ்க்கை என்பது விதி வகையால் அமையாது போனாலும் உடல் வருந்த முயற்சி செய்தால் அந்த அளவுக்குக் கூலி கிடைக்கும்.

இங்குத் தெய்வம் என்றது கடவுளையோ அல்லது மற்ற தெய்வங்களையோ அல்ல. ஆசிரியர் காலத்தில் ஊழினைத் தெய்வம் என்று கூறும் மரபு இருந்தது.

"தெய்வத்தான் ஆகாதெனினும்" - நேற்றைய வாழ்க்கையால் ஆகாது போனாலும்,

நேற்றைய சோம்பல் நிறைந்த வாழ்க்கையை இன்று முயன்று மாற்றியமைத்துக் கொண்டு முயற்சி செய்தால் அந்த அளவுக்குப் பயன் கிடைக்கும். பழக்கங்களை மாற்றுவது கடுமையாதலின் "மெய்வருத்த" என்றார்.

"கூலி" என்பது கொச்சைப் பொருள் தரும் சொல் அல்ல. நல்ல தமிழ்ச் சொல். பயன் என்றே பொருள் கொள்ள வேண்டும்.

*ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்*
*தாழாது உஞற்று பவர்.* (620)

இடர்களைக் கண்டு சளைத்து இளைத்துப் போகாமல் தொடர்ந்து தாழ்விலா முயற்சியை மேற்கொள்வோர் ஊழின் தாக்குதலையும் புறம் கண்டு பயன் காப்பர்.

முயற்சியின் அமைவு இன்னதென உணர்த்துவதற்காக "உலைவின்றி" "தாழாது" என்ற சொற்களை அமைத்துக் கூறினார்.

"உலைவின்றி" - மனத்தில் சலனம், ஊசலாட்டம் இன்றி.

"தாழாது" - நாளும் நாளும் தொடர்ந்து வளர்ச்சியை நோக்கி.

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.சாமி. தியாகராசன்)

## நெஞ்சில் நின்ற கேள்வி

இராமன் வனம் செல்வது உறுதி. இனி இவனைத் தன்னால் தடுக்க முடியாது, தசரதனால்தான் முடியும் என எண்ணிய கோசலை அவனைத் தேடிக்கொண்டு கைகேயி அரண்மனைக்குச் செல்கிறாள். அங்கே தசரதன் இருந்த நிலையைக் கண்டு தவித்துப் போகின்றாள். அழுது அரற்றுகிறாள். பின் ஒருவாறு தேறி "உண்மைக்கு உறைவிடமே! அரசர்க்கரசே! உனது உயிரைப் பாதுகாக்காது இங்ஙனம் தேம்பிப் புலம்பினால் உன்னால் காக்கப்படும் இவ்வுலகம் துன்பத்தால் துவளும். மேலும் முனிவன் வசிட்டனுடன் நம் மகன் வந்தாலும் வரும் வருந்தாதே" எனத் தசரதனைத் தேற்றி அவன் உடலை மெல்லத் தடவிக் கொடுத்து அமைதிப்படுத்துகின்றாள். அப்போது தசரதன் அவளைப் பார்த்து "கோசலையே! கூனியின் பேச்சைக் கேட்டு மாயம் வல்லாளாகிய கைகேயி எனது உயிரைப் போக்கத் துணிந்துவிட்டாள். அவளும் அவள் மகனும் இந்த நாட்டை ஆளவேண்டும் என்பதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் சிறந்த என் மகன் இராமனைக் காட்டிற்குச் செல்ல வேண்டும் என்றாளே, அது ஏன்" என்று கேட்டுப் புலம்புகின்றான்.

"வன்மாயக் கைகேசி வாக்கால் என்தன் உயிரை
முன்மாய் விப்பத்துணிந் தாளேனும் கூனி மொழியாள்
தன்மா மகனும் தானும் தரணிபெ றுமாறன்றி
என்மா மகனைக் கானேகு என்றாள் என்றான்"

என்பது தசரதன் புலம்பல்.

தன் மகனும் தானும் தரணி பெறுவதோடு மட்டும் அல்லாமல் மேற்கொண்டு என் மகனாகிய இராமனைக் காட்டுக்குச் செல்ல வேண்டும் என்றாளே அது ஏன்? என்ற கேள்வி தசரதன் நெஞ்சில் தோன்றி நிற்பதையும் அதுவே அவனைத் தொல்லைக்கு உள்ளாக்குவதையும் இந்தச் செய்யுளிலிருந்து நம்மால் உணர முடிகின்றது.

தசரதன் உள்ளத்தில் தோன்றி உறுத்திய அதே கேள்வி நமது நெஞ்சிலும் தோன்றி அலைக்கழிக்கின்றது. தசரதனுக்கு இக்கேள்விக்கான விடை தெரிந்ததா? தெரியவில்லையா? அது பற்றிக் கம்பனில் குறிப்பில்லை. இருப்பினும் விடை தெரியாமல் அவன் இறந்து போனான் என்றுதான் கருத வேண்டியுள்ளது. அவன் அவ்வாறு போக அதே கேள்வி நம்மைத் துன்புறுத்துகிறதே! இந்த கேள்விக்கு விடை காண வேண்டியுள்ளதே! அதனைப் பார்ப்போம்.

கணவனாகிய தசரதன் தன் காலில் விழுந்து கெஞ்சிய போதும் கூட இராமன் காட்டிற்குப் போயே ஆக வேண்டும் என்று விடாப்பிடியாக நின்றுவிட்ட கைகேயி யார் தெரியுமா? "தாய் கையில் வளர்ந்திலன் வளர்த்தது - தவத்தால் கேகயன் மடந்தை" என்று ஊரார் போற்றிப் புகழும் வண்ணம் பெற்ற தாயினும் இராமனைப் பெரிதும் போற்றி வளர்த்தவள். "விராவ அரும்புவிக்கு எலாம் வேதமே ஆன - இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ" என்று பெருமிதம் பொங்கக் கூறியவள். இராமனிடத்து முன் விரோதம் ஏதும் இல்லாதவள். இராமனுக்கும் பரதனுக்கும் இடையே வேற்றுமை காணாதவள். அப்பேர்ப்பட்ட கைகேயிதான் இராமன் காடாள வேண்டும் என்பதில் உறுதியாக நிற்கின்றாள். இதற்குச் சரியான காரணம் ஒன்று இருந்தேயாக வேண்டும். அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும் செலுத்த கூனியின் பேச்சைக் கேட்டு இன்னருள் துறந்து இரக்கம் இல்லாமல் இராமன் காடாள வேண்டும் எனக் கைகேயி கட்டளை இட்டாள் என்னும் பௌராணிக ரீதியில் காரணம் சொல்லாமல் இலக்கிய நோக்கில் இருக்கும் காரணத்தை அறிய வேண்டும். புராண ரீதியில் காரணம் சொல்லப் புகுந்தால் தசரதன் நெஞ்சில் தோன்றிய கேள்விக்கே இடமில்லாமல் போய்விடும். மேலும் கதைவழிக் காரணத்தைக் கம்பன் தானே காட்டிவிட்டான். இலக்கியவழிக் காரணத்தை நாம்தான் காணவேண்டும். இனி அது நம் பொறுப்பு.

காட்டிற்குச் சென்றுவிட்ட இராமனை மீண்டும் நாட்டிற்கு அழைத்து வரப் பரதன் செல்கிறான். இராமனைச் சந்தித்துத் தசரதன் விண்ணுலகம் சென்ற செய்தியைச் சொல்கின்றான். இறந்துபோன் தந்தைக்குச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்த பின்பு இராமன் பரதனை நோக்கி நீ விரதவேடம் பூண்டு வந்தது எதன் பொருட்டு என்கின்றான்.

மூத்தவன் இருக்க இளையவன் அரசேற்றல் என்பது நம் முன்னோர் கொண்ட முறைமையின் நீங்கியது அன்றோ! முறைவிட்டு நீங்கிய அரசை விட இவ்வுலகில் கொடுமை வேறு உண்டோ? அந்தக் கொடுமைக்கு நான் ஆளாகமாட்டேன். மூத்தவனாகிய நீயே ஆட்சியை ஏற்கவேண்டும். அதன் பொருட்டே இந்த வேடம் என்கின்றான் பரதன்.

அதற்கு மாற்றாகப் பெற்றோர் பேச்சைக் கேட்பதே பிறந்த பிள்ளைகளின் தலையாய கடமை என்பதைப் பலவாறாகப் பரதனுக்கு எடுத்துச் சொல்லிவரும் இராமன் இறுதியில்

"வரனில் உந்தை சொல்மரபினால் உடைத்
தரணி நின்னது என்றியைந்த தன்மையில்
உரனில் நீ பிறந்து உரிமை ஆதலால்
அரசுநின்னதே ஆள்க.... " என்கின்றான்.

"தந்த வரத்தில் உறுதியாக நின்ற தந்தை சொன்ன முறையால் இந்த நிலம் உனக்கு உரியது என்று ஆன தன்மையாலும், ஆட்சி செய்வதற்கான வலிமையுடன் நீ பிறந்தாய் அது காரணமாக உனக்கு உரியது என்பதாலும் இந்த அரசு உனக்கு உரியதேயாகும். ஆதலால் நீயே ஆளவேண்டும்" என்பது இப்பாடலுக்கான பொருளாகும்.

இந்தப் பாடலில் காணப்படும் முதலிரண்டு வரிகளின் பொருளில் ஐயமில்லை. பொருள் தெளிவாகத் தெரிந்ததே. அடுத்த இரண்டு அடிகளில் சொல்லப்படும் செய்தியே நமக்கு முக்கியமானதாகும். அதிலும் குறிப்பாக "நீ பிறந்து உரிமை ஆதலால்" என்னும் தொடரே கவனிக்கப்படவேண்டியதாகும்.

"நீ பிறந்து உரிமை ஆதலால்" என்னும் இத்தொடருக்குப் பொருள் காணவேண்டும். இந்தத் தேசத்தை நீ ஆளுவது என்பது உன் பிறப்புரிமை என மூத்தவனாகிய இராமன் இளையவனாகிய பரதனிடம் கூறுகின்றான். மூத்தவன்தான் நாட்டை ஆளவேண்டும் அதுவே முறை, அது மரபு, அதுவே ஒழுங்கு எனச் சொல்லும் தம்பியிடம் கூறுகின்றான்.

நடையில் உயர் நாயகன், உத்தம நம்பி, செப்பரும் குணத்துச் செம்மல், முறைபிறழாதவன் என உலகோரால் பாராட்டப்படும் இராமன் இவ்வாறு கூறுகின்றான் என்றால் அதில் ஏதோ ஒரு நியாயம் இருக்கத்தானேவேண்டும். இராமன் கூற்றிலிருந்து ஒரு செய்தி தெளிவாகிறது. கோசல நாட்டு அரசுரிமை பரதனுக்குப் பிறப்புக் காரணமாக வருகிற உரிமை என்பது மட்டும் தெளிவாகிறது. அப்படியாயின் எவ்வகையில் அது வருகின்றது எவ்வகையில் அது ஏற்புடையதாகிறது என்பதைப் பார்க்க வேண்டும்.

இந்தத் தொடருக்கு இரண்டு வகையில் பொருள் கொள்ள முடியும். ஒன்று வான்மீகத்தில் சொல்லப்படும் கதையின் அடிப்படையிலானது. மற்றொன்று கம்பனில் காணப்படுவது. முதலில் வான்மீகிக் கதையைப் பார்ப்போம். கேகனிடம் அவன் மகளாகிய கைகேயியைப் பெண் கேட்டு மணம் முடிக்க ஆசைப்பட்ட தசரதன், கேகயன் கேட்டுக்கொண்டதற் கிணங்கிக் கைகேயி வயிற்றினிடமாகப் பிறக்கும் மகனுக்கே கோசல நாட்டை ஆளும் உரிமையைத் தருவேன் என்று சத்தியம் செய்து தந்தான். அந்தக் கைகேயி வயிற்றில் வந்து வாய்த்ததால் கோசல நாட்டு ஆட்சி உரிமை பரதனுக்கு ஆகிறது என்பதாகும் அது. வான்மீகி இராமாயணத்தில் காணப்படும் இந்தப் பகுதியைக் கம்பன் தன் இராமாயணத்தில் கைக்கொள்ளவில்லை ஏன்?

(தொடரும்)

## புத்தாண்டே வருக!

வா!வா! புத்தாண்டே!
மங்கல வியஆண்டே!
பூவாய் நீவருக!
பொன்னாய் ஒளிதருக!
மேவும் கயமைஇருள்
விடிய நீவருக!
தூவி மலர்கொண்டு
தொழுது வாழ்த்துகிறோம்!

-மரு. பரமகுரு

# இறைவன் பித்தன்

(பேராசிரியர்.ஆ. சிவலிங்கனார், மயிலம்)

இறைவனைச் சுந்தரர் "பித்தா" என அழைத்தார். ஏன்? சுந்தரர் புத்தூர் சடங்கவி மகளாரைத் திருமணம் செய்ய நேர்ந்தபோது மணப்பந்தலில் முதியவர் வடிவில் வந்த இறைவன் "சுந்தரர் தமக்கு அடிமை" என்றார். சுந்தரரின் பாட்டனார் தாமும் தம்வழி வருவோரும் திருவெண்ணெய் நல்லூரானுக்கு அடிமை என ஓலை எழுதிக் கைச்சாத்திட்டுக் கொடுத்ததாகவும் அதனால் சுந்தரர் தமக்கு அடிமை என்றும் வாதிட்டார்.

சுந்தரர் அதற்கிணங்காமல் ஓர் அந்தணன் மற்றோர் அந்தணனுக்கு அடிமையாவதில்லை. இவர் பித்தன் என்று மறுத்தார். வழக்குத் திருவெண்ணெய்நல்லூர்ச் சபையாரிடம் சென்றது. சபையார் அடிமை என்பதற்கு ஆதாரம் காட்டவேண்டும் என்றனர். முதியவர் வடிவில் இருந்த இறைவன் ஓலை ஒன்று காட்டச் சுந்தரர் இவன் பித்தன் எனக் கூறி ஓலையைக் கிழித்தெறிந்தார்.

முதியவர் இதுபடியோலை, மூலவோலை இதோ எனக் காட்டினார். சபையார் முதியவரை நீர் யார்? என்றபோது அவர் "காட்டுகிறேன் வருக" என்று கூறி வெண்ணெய் நல்லூர்க் கோயிலில் மறைந்தார். உடன் சென்றவருள் சுந்தரர் முதியவர் இறைவன் என்றுணர்ந்து "இறைவனே பொறுத்தருள்க; நின்னை எப்படிப் பாடுவேன்" என இரங்கினார். "என்னைப் பித்தன் என வைதமையால் பித்தா என்றே விளித்துப் பாடுக" என்றார் இறைவன். சுந்தரர் உடனே "பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா" எனப் பாடினார்.

சுந்தரர் வைத "பித்தா" என்பதை இறைவன் விரும்பி, அதையே வைத்துப் பாடுக என்றது ஏன்? இறைவன் பித்தனா?" ஆம்; பித்தனே!

ஒருதாய் தான் பெற்ற ஆண்குழந்தையைப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்து, வயதில் பெரியவனான பின் மணமும் முடித்து மனையறத்து அமர்த்தி மகிழ்ந்தாள். மகன், வந்த மனைவியுடன் வாழ்ந்து வரும்போது மனைவியின் வயப்பட்டவனாய்த் தாயை மதிக்காமல் அடிக்கடிச் சண்டை பிடிக்கவும் செய்தான். வாய்ச் சண்டை கைச்சண்டையளவில் முற்ற,

தாய் அவனால் விரட்டப்பட்ட நிலையில் அடுத்த தெருவில் குடியேறினாள். சில நாள்கள் கழிந்தன.

மகன் குடியிருந்த பக்கத்துத் தெருவில் ஒரு கூட்டம் கூடியது. கூட்டத்திலிருந்த ஒருவன் ஓடிவந்து "அம்மா உன் மகன் விபத்தில் அடிபட்டு உணர்விழந்து கிடக்கிறான்" என்றான். உடனே தாய் ஐயோ மகனே! என்று அவனைப் பார்க்க ஓடினாள். அவளைப் பார்த்த ஒருவன் "பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு" என்று பக்கத்தில் இருந்தவரிடம் கூறினான். இது நடந்த நிகழ்ச்சி. இதில் பெற்ற மனம் "பித்து" என்ற சொல்லைப் பார்க்க வேண்டும்.

தன்னைச் சோறு போடாமல் விரட்டியடித்த மகன், அடிபட்டுக் கிடக்கிறான் என்றதும் மகனே என்று ஓடினாளே, அதுதான் பித்து. இதனால் "தன்னைத் தாக்கினாலும் தாக்கியவனுக்குக் காட்டும் இரக்கமே" பித்து என்பது பெறப்படுகிறது.

இங்கு இறைவன் பித்தன் என்றால் தன்னைப் பித்தன் எனத் திட்டிய சுந்தரரைக் காக்கச் செய்தது என்ன?

கயிலாயத்து மலர் கொய்து கொண்டிருந்தபோது அநிந்திதை, கமலினி எனும் இரு மாதரை விரும்பியதால் இறைவனால் நிலவுலகுக்கு அனுப்பப்பட்ட ஆலால சுந்தரரை அவர் வேண்டுகோட்படிப் பூமியில் வாழ்க்கைச் சிக்கலில் தவிக்காமல் ஆட்கொள்ள வேண்டியபோது ஆட்கொள்வோம் எனக் கூறினார் இறைவன்.

அந்நிலையில் சுந்தரருக்குத் திருமண நிகழ்ச்சியைத் தடுத்தாட்கொள்ள வேண்டித் தாயுள்ளம் கொண்ட இறைவன் வழக்கிட்டபோது சுந்தரர் பித்தன் எனத்திட்டிய போதும் அதையேற்று அவரை ஆட்கொள்ள நினைந்தது தாயின் பித்துபோன்ற இரக்கமாகும்.

உலகில் பித்தம் பிடித்தவன், தான் எதனால் அந்நிலை யடைந்தானோ அதிலேயே ஊன்றிப் பேசுவான்; நடப்பான். அதுவே பித்து எனப்படும். அப்பித்துடையவன் பித்தனாவான்.

இறைவன் சுந்தரரை உலக வாழ்வில் சிக்காமல் தடுக்க வேண்டும் என்ற எண்ணத்தால் அவ்வெண்ணத்தையே கொண்டு திருமணப் பந்தலில் வாதிட்டமையின் அதாவது அருளுள்ளத்தால் வாதிட்டமையின் இறைவன் பித்தன் ஆனார். அதனால்தான் சுந்தரர் "பித்தா எனப் பாடுக" என்றதும் பித்தா எனத் தொடங்கிப் பாடினார்.

இறைவன் பித்தனாக இருந்து அருள் செய்வதோடு தன்னை

விரும்பி அடைக்கலமாக வருவோர்க்கும் அருள்வார் என்பதற்காக அடுத்துப் "பிறைசூடி" என்றார். சந்திரன் சாபத்தால் கலைகுறைந்து ஒற்றைக் கலையாக இருந்தபோது வந்து அடைக்கலம் புகுந்தான் என்பதும் அவனுக்குக் கலை வளர்க என அருளினார் என்பதும் புராணம்.

பித்தா பிறைசூடி எனத் தன் வரலாறும் சந்திரன் கதையும் நினைந்தமையால் இறைவன் பெருந்தன்மை நினைந்து "பெருமானே" என்றார். பெருந்தன்மைக்குக் காரணம் அருளுள்ளம் ஆதலின் அடுத்து "அருளாளா" என்றும் விளித்தார்.

எனவே துன்பம் செய்வார்க்கும் இன்பமே செய்யும் அருளுள்ளம் உடையவன் ஆதலின் பித்தன் எனப்பட்டான் என்க.

★★★

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

- ஆசிரியர்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவள்ளுவம் பரவாமைக்குக் காரணங்கள்

(க.ப. அறவாணன், முன்னாள் துணைவேந்தர்)

*தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் தலைமையில் புதுக்கோட்டை உலகத் திருக்குறள் பேரவை மாநாட்டில் 22.01.06 அன்று நிகழ்த்திய உரை*

## சமயப் பொதுமைக் கோட்பாடு :

மிகப்பெரிய இன்னொரு காரணம், திருவள்ளுவர்தம் தனிச் சமய மறுப்பாகும். திருவள்ளுவர் காலத்தில் தமிழ்நாட்டில் சமணம், பௌத்தம், சைவம், வைணவம் இவற்றின் உட்பிரிவுகள் மிகப் பரவலாக இருந்தன. இவற்றினிடையே கடுமையான மதப்பூசல்களும் நிகழ்ந்தவண்ணம் இருந்தன. இவற்றால் மக்கள் மதஅடிப்படையில் பிரிந்து தமக்குள்ளேயே பகைத்துக் கிடந்தனர். சமயவாதிகள் ஆளும் அரசில் மிகப்பெரும் செல்வாக்கைப் பெற்றிருந்தனர். அக்காலத்து அரசனுக்குத் துணை என்று கருதப்பட்ட ஐம்பெருங் குழுவில் புரோகிதர் தலைமை இடம் பெற்றிருந்தார். (ஐம்பெரும் குழுவினர் :1. அமைச்சர் 2. புரோகிதர் 3. தானைத்தலைவர் 4. தூதுவர் 5. சாரணர். புரோகிதரே அரசர்களுக்கு முடிசூட்டினர் (பதிற்றுப்பத்து பார்க்க : பதிகம் 3,6). கங்கை கொண்ட சோழபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்ட இரண்டாம் குலோத்துங்க சோழன் (கி.பி.1133-1150) தில்லையில் தீட்சிதரே முடிசூட்ட அரசப் பொறுப்பை ஏற்றான். "தில்லைத் திருநகர் சிறப்புடைத்தாகத் திருமுடி சூடிய ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்" என்பது திருமாணிக்குழியில் காணப்பெறும் கல்வெட்டு வாசகம். பிற்காலச் சோழர்காலத்தில் அரசனுக்கு அடுத்த நிலையில் தமிழர் அல்லாத வேறு பகுதியைச் சேர்ந்த இராஜகுருக்கள் பெரும் பொறுப்பில் இருந்தனர். இப்பிற்கால நிலையை எல்லாம் தொலைநோக்கில் கண்டுணர்ந்த திருவள்ளுவர் தாம் திருக்குறள் எழுதிய காலத்திலேயே எந்தத் தனிச் சமயத்தையும் வற்புறுத்தவில்லை. புரோகிதருக்குத் தம் அரசியல் சித்தாந்தத்தில் திருவள்ளுவர் இடம் தரவில்லை. படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு அரண் என்ற ஆறனுக்கே இடம் அளித்தனர். (381). கடவுள் வாழ்த்து பாடியிருந்தாலும் உருவ வணக்கம் எதனையும்

குறிப்பிடவில்லை. கடவுளின் பாதத்தை குறிப்பிட்டாரே தவிர கடவுளின் முகம், நிறம், உடல் முதலியவற்றைக் குறிப்பிடவில்லை. கடவுளை உடன்பட்டாரே தவிர மதம் எதனையும் அவர் உடன்படவில்லை. இது மதவாதிகளுக்கு எதிரான கோட்பாடாக அமைந்தது. மதவாதிகளின் துணையின்றி, மதத்தின் துணையின்றித் தமிழரிடையே எந்த அறிவாளியும் அக்காலத்து முன்னிலை பெற்றுவிட முடியாது. (தற்காலத்துக் கட்சி சார்பில்லாத அறிவாளிகள் புறம் தள்ளப்படுதலைப்போல). சமயச் சார்பற்ற திருவள்ளுவர், சமய அமைப்பையே எதிர்த்தார். எந்தச் சமயத்தையும் வழிமொழியாத வள்ளுவரை அவர் காலத்து இருந்த அனைத்துச் சமயத்தாரும், புறக்கணித்திருத்தல் வேண்டும். "தீக்குறளைச் சென்று ஓதோம்" எனவரும் ஆண்டாள் பாவைப்பாடல் இங்கே சுட்டத்தக்கது.

இவற்றுக்கு மேலாகத் துணிச்சல் மிக்க இன்னொரு செயலையும் திருவள்ளுவர் செய்தார். அறத்துப்பாலின் முதல் அதிகாரமாக கடவுள் வாழ்த்தும், கடைசி அதிகாரமாக (38), ஊழும் அமைக்கப்பெற்றுள்ளன. இவ் அமைப்பின் நுட்பம் வருமாறு.

மாந்தன், ஒன்று கடவுளுக்கு அஞ்சி நடத்தல் வேண்டும். அல்லது தான் செய்யும் கர்மாவிற்கு அஞ்சி நடத்தல் வேண்டும். அல்லது இரண்டிற்கும் அஞ்சி நடத்தல் வேண்டும். கடவுளை நம்பும் ஆத்திகனாயின் கடவுள் வாழ்த்தைப் போற்றிப் பின்பற்றலாம். நாத்திகனாயின் கர்மா எனப்பெறும் வினையைப் போற்றிப் பின்பற்றலாம்.

கடவுள், கர்மா என்ற இரண்டையும் மீறும் வண்ணமாக இரு புதுக் கருத்துக்களைப் பொருட்பாலில் ஆள்வினை உடைமை எனும் அதிகாரத்தில் திருவள்ளுவர் பதிவு செய்துள்ளார். கடவுளால் அனைத்தும் நடக்காது. கவலைப்படாதே, அயராது முயற்சி செய் உன் முயற்சிக்கு ஏற்ற ஊதியம் கட்டாயம் வழங்கப்பெறும் என்கிறார்.

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (619)

ஒருவனது முயற்சிக்கும், தாழ்ச்சிக்கும் கடவுள் பொறுப்பன்று. அவனவன் செய்யும் செயல்களே பொறுப்பு. இக்கருத்தில்,

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். (505)

என்பார்.

அறத்துப்பாலின் இறுதியில்,

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். (380)

என்று வற்புறுத்தியவர், ஊழ் என்ற கர்மாவையும், தோற்கடிக்க முடியும் முயற்சியாளன் தளராது முயலுவானேயானால், வினையை/விதியை வீழ்த்தி வெற்றிபெற முடியும் என்கிறார்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர். (620)

இன்னும் சற்றே மேலே போய் ஒருவன் சோம்பல் சிறிதும் இல்லாமல் தன் இலக்கை நோக்கி உழைப்பானேயானால் அவன் வெற்றி பெறுவான். அவனுடைய காலடியில் செல்வத்திற்குத் தலைவியான இலட்சுமி வந்து விழுவாள்.

மடியினாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். (617)

இன்னும் மேலேபோய் மாந்தன், வைகுண்டம் என்று எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டியதில்லை. சொர்க்கம், மோட்சம் என்று கண்ணுக்குப் புலப்படாத கற்பனைகளில் மூழ்கியிருக்க வேண்டியதில்லை. மாறாக வைகுண்டம், சொர்க்கம், மோட்சம் ஆகியவற்றைத் தன் இன்பமான இல்லற வாழ்வின் மூலம் பெறமுடியும் என்று இன்பத்துப்பாலில் தெளிவுபடுத்தியுள்ளார்.

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. (1103)

ஒருவன், தான் மனமார நேசிக்கும் காதலியின் தோள் மேல், உறக்கம் கொள்ளுதலைவிடத் திருமாலின் வைகுண்ட உலகம் இனிதில்லை என்பது கருத்து. ஆக, திருவள்ளுவர் தம் சமகால அரசியலையும், சமயத்தையும் வெளிப்பட எதிர்த்தார் என்பது தெளிவு. இந்நிலையில் தமிழரைப் பொறுத்த அளவிற்கு ஒருவரை முன்னிலைப் படுத்தும் அரசியலும் (கட்சியும்), சமயமும், எதிராகத் திரும்பும்போது அறிஞர் புறக்கணிக்கப்படுவர். அறிவு புறக்கணிக்கப்படும் என்பதற்குச் சரியான சான்றே திருவள்ளுவர், அவர்தம் திருக்குறள் : திருவள்ளுவம்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அருளாலயத் தேர்தல்

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி - 9)

ஆள்கின்ற கட்சி யாரும்
ஆண்டஎதிர்க் கட்சி யாரும்
ஆளுக்காள் அழகாய்க் கூறும்
ஆங்காரப் பொய்,மெய் பேச்சால்
மூள்கின்ற கோபத் தாலே
மூர்க்கமாய் அடித்துக் கொள்ளும்
நாள்கூட வரலாம்! அன்றோ
நாமொதுங்கிக் கொள்ளல் வேண்டும்!

சுவரில்தான் எழுத வேண்டின்
சுகமான வீட்டார் தந்த
தவறிலா ஒப்புத லாலே
தப்பின்றி எழுத லாகும்!
எவரவ் வாறு செய்வார்?
எதிர்ப்பாகக் கேட்டால் நம்மைச்
சுவராக்கிச் சுண்ணாம் படித்துச்
சுண்டைக்காய் ஆக்கிச் செல்வார்!

வேட்பாளர் என்று சொன்னால்
வியனுலக மக்கட் கென்றும்
வேட்கையாய் தொண்டு செய்ய
விரும்புவேன் என்ப தாக
வேட்புமனு தாக்கல் செய்ய
விழைந்திடும் போதி ருந்த
வேட்கைபோல் எந்நா ளும்மே
விருப்பத்தோ டிருக்க வேண்டும்!

வெற்றிதான் பெற்று விட்டால்
வெற்றார வார மின்றி
உற்றிடும் தொண்ட ராக
உயர்ந்திட வேண்டும், கட்சிப்
பெற்றிமை காப்ப தோடு
பெரிதாக எதிர்த்துத் தோற்றோர்
பற்றிய பகைமை நீங்கிப்
பண்புடன் பழக வேண்டும்!

தன்கட்சி ஆட்கள் என்று
தனியாகச் சலுகை செய்தல்
எந்நாளும் கூடா! மாற்று
எதிர்க்கட்சி யாள ராக
முன்னாளில் எதிர்த்தோ ரென்று
முனைப்பேதும் காட்டா ராகி
இந்நாளில் நடுநிலை யோடே
எல்லோர்க்கும் இருத்தல் வேண்டும்!

கொடுத்திட்ட நல்வாக் கைத்தான்
கூடிய மட்டும் காக்க
அடுத்திட்ட சட்ட மன்ற
ஆன்றவை கூட்டந் தன்னில்
விடுத்திட்ட கோரிக் கையால்
வீறுபுகழ் வாதத் தாலே
தொடுத்திட்ட பூமா லைபோல்
தொகுதியைமேம் படுத்த வேண்டும்!

வாக்காளர் என்போர் தாமும்,
வந்துவாக்குக் கேட்போர் தம்மின்
நாக்குபுகழ் சொல்லைத் தானும்
நம்பிடக் கூடா! அன்னார்
நோக்கினை அறிய வேண்டும்!
நொய்விலா வாழ்க்கைச் சூழல்
போக்கையும் அறிந்து, வாக்கைப்
பொலிவுடன் அளிக்க வேண்டும்!

சாதிக்கு, இல்லை வாக்கு!
சழக்கர்க்கும் இல்லை வாக்கு!
பேதித்துக் கூறும் மத்தின்
பித்தர்க்கும் இல்லை வாக்கு!
வாதித்துச் சண்டை போடும்
வம்பர்க்கும் இல்லை வாக்கு!
போதித்த படிவா ழாத
பொல்லார்க்கும் இல்லை வாக்கு!

என்றேதான் வாக்கா ளர்கள்
எல்லாவேட் பாளர் தம்மை
நன்றேயென் றாய்ந்து பார்த்து
நற்குணத்தின் குன்றிவர் என்றே
ஒன்றாகத் தேர்வு செய்யும்
உயர்வுக்கே தேர்தல் என்ற
பொன்றாத பொருத்தத் தாலே
பொலிந்திடுமத் தேர்தல் சொல்லே!

ஆதலால் தேர்தல் பற்றி
ஐயந்தீர்ந் திற்றோ என்று
காதலால் சொன்னோர் தம்மின்
கனிவுரை கேட்ட போது,
ஓதம்சூழ் குன்றக் குடியின்
ஒய்யார அருளா லயத்தின்
பேதமிலாத் தேர்தல் வாக்கைப்
பெய்யவே நின்றேன் நானே!

**புத்தாண்டு வாழ்த்து!**

"மக்கள் சிந்தனை" சந்தாதாரர்களுக்கும்
வாசகர்களுக்கும் அன்பர்களுக்கும் இனிய புத்தாண்டு
வாழ்த்துக்கள்!

# துன்ப உலகம்

(வித்துவான். **தா. குருசாமி,** மதுரை)

"போகம் ஈன்ற புண்ணியன்" என்பது சிவபெருமானின் அடையாளம். அடையாளம் காட்டியவர் சீவகசிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவர்.

போகம் என்பது இன்பம் மட்டுமன்று. துன்பமும் போகத்தின் மறுபக்கமாகும். இன்பத்தை எய்தியவர் துன்பத்தை எய்திடப் பின்வாங்குவது ஏன்? இந்த வினாவை எழுப்பி விடை கண்டவர் திருவள்ளுவர்.

உடம்புகள் துன்பம் என்னும் வாளுக்கு இலக்கு என்று தெரிய வேண்டும்; அப்படித் தெரிந்தவர் தம்மேல் வந்த துன்பத்தைத் துன்பமாகக் கொள்ளார் அறிவுடையார் என்ற கருத்தில் வழங்கிய குறள் சிந்தனையின் உச்சமாகும்.

*"இலக்கம் உடம்பு இடும்பைக்குஎன்று கலக்கத்தைக்*
*கையாறாக் கொள்ளாதாம் மேல்"* - இக்குறள்

துன்பம் வந்தபோது, அஞ்சாமையும், அதற்குரிய வழியும் கூறிய திருவள்ளுவர் சிந்தனையை அறிஞர் ஒருவர் பாராட்டி மிக மகிழ்கின்றார்.

"The urise know that the body is a target
unto mis for tune: and so they worry themselves
not when they meet with a calamity"

என்று மொழிபெயர்த்து தூரதேசத்துக்கு வழங்கியுள்ளார்.

பிற்காலச் சோழரின் எழுச்சிக்கு வித்திட்டவன் விசயாலய சோழன். அச்சோழமன்னன் தொண்ணூற்றாறு புண் பெற்றவன். அவன் பெற்ற "விழுப்புண்" வீழ்ந்த சேரநாட்டை எழுச்சி பெற வைத்தது. அவனடைந்த "துன்பம்" ஆதித்த சோழனையும், இராசராச சோழனையும், இராசேந்திர சோழனையும், குலோத்துங்க சோழனையும் தந்தது. விளைவு பெரியபுராணமே கிட்டியது.

"துன்பம்" ஒரு வரப்பிரசாதம் என்பர் மணிவாசகர். ஆதலால் திருவள்ளுவர் முடிபு கூறியதை வழிமொழிந்து நமக்குப் பதிகப் பெருவழி அமைத்துத் தந்துள்ளனர்.

*துன்பமே! பிறப்பொடுமயக்காம்*
*தொடக்கு எல்லாம் அறுத்த நற்சோதி!*
*இன்பமே! உன்னைச் சிக்கெனப்*
*பிடித்தேன்! எங்கெழுந்தருளுவதினியே -*

என்று துன்பத்தின் மறுபக்கத்தையும் நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார் வாதவூரார்.

திருஞானசம்பந்தர் பன்மறையோர் செய்தொழிலறிந்தவர்; பரமசிவாகம விதியும் உணர்ந்தவர். அவரும் திருவள்ளுவர் முடிபைத் தலைமேற்கொண்டு முடிபே கூறிவிடுகிறார். முதலிலேயே* "துயரிலங்கும் உலகு" என்று.

இந்த உலகம் "துன்ப உலகம்" என்பதனைக் கண்டுபிடித்த ஞானிகள், அதற்குத் தீர்வும் கண்டுபிடித்தனர்.

*"இன்னாதம்ம! இவ்வுலகம்!*
*அதனுள் இனிய காண்க*
*இயல்புணர்ந்தோரே"*

என்று புறநானூற்றுப் புலவர் தீர்வு காட்டியுள்ளார்.

அதே தீர்வைத் திருவள்ளுவரும் இன்னாமையை இன்பமாகக் கொள்க என்று செவியறிவுறுத்துகின்றார். பதிகப்பெருவழி காட்டியவரில் திருநாவுக்கரசர் துன்பதை அநுபவித்தவர்.

தந்தை தாயை இழந்த திருநாவுக்கரசர், திலகவதியாரின் மணவாழ்வு இழப்பு பெருந்துன்பத்தை விளைவித்தது. வந்தேறிகளின் சமயம் துன்ப ஆறுதலைத் தரும் என்று சென்று, ஆறுதல் பெற புறப்பட்ட இடத்திற்கே வந்தார்.

மீண்ட சொர்க்கம் என்ற மில்டனின் கவிதையும், அப்பர் அடிகளின் மறுமலர்ச்சி பெற்ற வரலாற்றையே உணர்த்துகிறது. அப்பரடிகளின் துன்பநீக்கம் இறைவனைச் சார்ந்தபோதுதான்

*"தோடுடைய செவியன்" - பதிகம் 8ஆம் பாட்டு

இன்ப ஆக்கமாயிற்று. அறிஞர்கள் கருத்து என்றும் ஒன்றாகவே இருக்கும்.

"இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று தாம் பதிகப் பெருவழியில் பயணித்த பாங்கைப் பதிவு செய்கிறார். அதோடு அவர் நிற்கவில்லை.

"துன்பம் நிறைந்த உலகம்" என்பது சமண பௌத்தங்கள் கண்டுபிடித்த கோட்பாடுதான். சங்கரர், இராமானுஜர் கோட்பாடும் அதுதான். சைவசித்தாந்தக் கோட்பாடும் அதுதான். ஆனால் துன்ப நீக்கத்திற்கு வழி என்ன என்பதனை பௌத்த சமணம் சரியாகக் கற்பிக்கவில்லை.

அதனைப் புறநானூற்றுப் புலவன் "துன்ப உலகில் இனிய காண்க" - என்று மொழிந்ததை அவ்வின்பப் பொருள் "இறைவன்" என்பதனைச் சரியாக அடையாளம் காட்டிப் பைந்தமிழ் நாட்டை உய்வித்த பெருமகன் முதலில் "பாலறா வாயரே" யாவார்.

"இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே" என்று துயர் நிறைந்த உலகத்தில் கொடி ஏற்றி விழா எடுக்கிறார் திருஞானசம்பந்தர். அப்பதிகப் பெருவழியிற் பயணித்த திருநாவுக்கரசர் திருப்புகலூரில் இறுதியாக எழுந்தருளியிருந்தபோது, "துன்பத்தை" ஆராய்ந்து சிந்திக்கின்றார்.

அவரைத் தவிர, துன்பவாளால் வெட்டுப்பட்டவர் வேறு யாவர்? அவர் சிந்தனைத் துளிகளில் ஒன்று

திருப்புகலூர் இறைவனைச் சரணடைந்து அவரோடு உரையாடுகிறார்.

"பொன் போன்ற மேனியினை உடைய இறைவரே! இமவான் மகளை ஒருபால் கொண்டவரே! யாருமற்ற எனக்கு இரங்கி அருள்செய்ய வேண்டும்" என்று வேண்டிய பின்பு, முத்தாய்ப்பாக முடிப்பதுதான் பெருவிருந்து.

புன்னை மரத்தினைத் தலமரமாகக் கொண்டது திருப்புகலூர்த் தலம். அப்புன்னைமரத்து மலர்கள், முத்துப் போன்ற வெண்மையானவை. ஆனால் புன்னைமலர்கள் இலவம் பஞ்சுபோல் மென்மைத்தன்மை உடையவை. பண்புவமை மட்டுமே!

அம்மலர் மெத்தையில் வண்டுகள் தேனை உண்டு உறங்குகின்றன. இது ஓர் இன்ப அனுபவம். வண்டு - உயிர்கள்; புன்னை மலரின் தேன் - படுக்கை - அனைத்தும் இறைவன்; என்று நமக்கு கற்பனை கற்பித்த, ஆளுடை அரசு இறுதியாக ஒன்றை, நமக்கு இறைவனிடம் பேசுவது போல உணர்த்துகிறார்.

"என்னைப் பிறப்பிக்க இல்லை என்றால், இந்த துன்பத்திற்கு இருப்பிடம் எங்கு கிடைக்கும்" என்று புகலூரிறைவனிடம் சுவைபடப் பாடிச் சிந்திக்க வைக்கின்றார். அச்சிந்தனைத் திருவிருத்தத் தேவாரம் முன்னோர் கண்ட முடிவின் பெருங்கோயிலாகும். அக்கோயிலைத் தரிசித்து ஓதி மகிழ்வோமாக!

*பொன்னை வகுத்தன்ன மேனியனே!*
*புணர் மென்முலையாள்*
*தன்னை வகுத்தன்ன பாகத்தனே!*
*தமியேற்கு இரங்காய்!*
*புன்னைமலர்த்தலை வண்டு உறங்கும்*
*புகலூர் அரசே!*
*என்னை வகுத்திலையேல் இடும்பைக்குஇடம்*
*யாது சொல்லே.*

-திருநாவுக்கரசர் (தேவாரம்)

## வாய்ப்பு

வாய்ப்பு என்பது எப்போதுமே நமது காலடிகளுக்குக் கீழே உள்ளது. நாம் இதனைத் தேடி வேறு எங்கும் செல்ல வேண்டியதில்லை. நாம் செய்ய வேண்டியதெல்லாம் அந்த வாய்ப்பைக் கண்டுணர்வதாகும். வாய்ப்பினை எப்படிக் கண்டுணர்வது என்று தெரியாதவர்கள், வாய்ப்பு அவர்களது கதவைத் தட்டும் பொழுது அந்தச் சத்தத்தைப் பற்றிக் குறைகூறிக் கொண்டிருப்பார்கள். ஒரே வாய்ப்பு இருமுறை வருவதில்லை. அடுத்த வாய்ப்பு நல்லதாகவோ, கெட்டதாகவோ இருக்கலாமே தவிர, ஒருபொழுதும் ஒரே வாய்ப்பாக இருக்காது.

**- தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்,**
"காற்றில் வந்த கருத்து மழை"

# உழவோரே எழவீர்

(புலவர். வீ.செ. கந்தசாமி
துணைத்தலைவர், உலகத்திருக்குறள் பேரவை)

மன்னருடன் மந்திரிமற் றாள்வோ ரென்றும்
மதிநுட்பம் மிகப்பெற்ற அறிஞ ரென்றும்
குன்றாத நோயெனினுங் குணப்ப டுத்தும்
கூர்மதியர் மருத்துவத்தில் மேதை யென்றும்
சென்றவிட மெங்குஞ்சீர் சிறப்பே எய்தும்
திறமான புலமைமிகு கவிஞ ரென்றும்
மன்னுபுகழ் பெற்றவரோ டனைவ ருக்கும்
வயிற்றினுக்கே உணவளிப்போர் உழவரன்றோ!

கதிரவனின் வரவுக்கே காத்தி ராமல்
கடும்பனியைக் கொடுவெயிலைக் கருதி டாமல்
உதிரத்தை வியர்வையாய்க் கொட்டிக் கொட்டி
உழைக்கின்ற உழுவார்கள் வறுமை வாட்ட
உயிரைவிடும் நிலைமைக்கேன் தள்ளப் பட்டார்
உணர்வுடையோர் இதற்கென்ன பதில்சொல் கின்றீர்?
எலிகளுடன் நத்தைகளை உழவ ருண்ணும்
இழிநிலையு மிந்நாட் டில்நிலவு தையோ!

வானோங்குங் கட்டடங்கள் நிலைப்ப தற்கே
மண்புதைந்து தாங்குகிற அடிக்கல் போல
மானுடத்தின் வாழ்விற்கே ஆணி யாக
வாழ்கின்ற உழுவாருக் குயர்வே இல்லை
தேனொழுகப் பேசிடுவோர் பின்செல் லாமல்
தேக்கமுற்ற அவர்வாழ்வில் திருப்பம் வேண்டின்
கூனாகி உழைக்கின்ற உழவ ரெல்லாம்
கொடிறுடைக்கும் கையர்களாய் மாற வேண்டும்

இல்லையோ ஆடைஎன உடுத்திக் கொண்டு
எதிர்ப்படுவோர் இந்திரிய வயம யங்க
நல்லிளமை வளங்கொழிக்கு மங்கங் காட்டும்
நடிகைக்கும் பாராட்டும் விருது முண்டு
அல்லாத செய்துபெரும் பொருளைச் சேர்க்கும்
அறஞ்சாராச் செல்வரையும் புகழ்ச்சி செய்வர்
சொல்லாலே விளக்கவொணாத் துன்ப முற்றுச்
சோறளிக்கும் உழவர்களின் துயரம் போக்கார்

உழவர்களின் உரிமைக்குக் குரல்கொ டுத்தே
உற்றதுயர் தீர்க்கமன மெவர்க்கு மில்லை
பழமரத்தை நாடுகின்ற வௌவால் கள்போல்
பணங்கொண்டோர் நகர்வாழ்வோர் தமையே நத்திப்
பிழைக்கின்ற கட்சிகளின் புறக்க ணிப்பால்
புதுவாழ்வு காணாமல் உழவ ரெல்லாம்
தழையுதிர்ந்த மரம்போலத் தவிக்க லானார்
தழைத்தவர்கள் எழுச்சிபெறக் காண்போம் நாமே!

## நமது வாக்கு யாருக்கு?

நமது நாடு சுரண்டப்படுதலையும், நாட்டின் பொருளாதாரச் சீரழிவுகளையும் கடன் சுமைகளையும் நமது வாக்காளர்கள் அறிதல் வேண்டும்; உணர்தல் வேண்டும்; நாம் அனைவரும் இந்த நாட்டினுடைய சொத்து, ஆதலால் நாட்டைப் பொருளாதாரச் சீரழிவிலிருந்து மீட்க வேண்டும். மேலும் இந்த நாட்டை வளம் கொழிக்கும் நாடாக மாற்ற வேண்டும். இந்தப் பணியைச் செய்து முடிக்கக்கூடிய ஆட்சியை அமைக்க வேண்டும் என்றெல்லாம் - நாள்தோறும் எண்ண வேண்டும். வாக்களிப்பதற்கு முன் ஒரு முறைக்கு மூன்று முறை எண்ண வேண்டும். நம்முடைய இலட்சியமாக உள்ள நாட்டினை அமைக்கக்கூடிய திறனாளர்களுக்கு மட்டுமே வாக்களிக்க வேண்டும். திருக்குறள் காட்டும் நாடாக நமது நாடு அமையவேண்டும்.

**- தவத்திரு குன்றக்குடி அடிகளார்,**
"வாக்காளர்களுக்கு வள்ளுவரின் அறிவுரைகள்"

# அறிவியல் உறவும் ஆன்மீக உறவும்

(டாக்டர். **கே. பாலகிருஷ்ணன்)**

1977-ஆம் ஆண்டு நடந்த அறிவியல் மகா நாட்டில் ஜனதா அரசு விஞ்ஞானிகளும், ஆராய்ச்சிக் கழகங்களும் கிராமங்களைத் தத்து எடுத்து கிராமப்புற வளர்ச்சிக்கு வழிகாட்டவும், உதவவும், திட்டமிடவும் முன்வர வேண்டும் என்ற கொள்கையை அறிவியலாளர்கள் முன்பு எடுத்துக் கூறியது. இதைக் கருத்தில் கொண்டு மத்திய மின் வேதியியல் ஆய்வகம் முனைவர் H.V.K. உடுப்பா அவர்கள் இயக்குநராக இருந்தபோது விஞ்ஞானிகளை இத்துறையில் ஓரளவு ஊக்குவித்தது.

பரிபூரணமடைந்த தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும் ஒரு பக்கத்து கிராமத்தில் அடிக்கடி நிகழும் தீ விபத்துக் காரணமாக செக்ரியை தற்செயலாக நாடிவர குன்றக்குடிக்கும் செக்ரி விஞ்ஞானிகளுக்கும் அறிவியல் தொடர்பு ஏற்பட்டு இருவரும் இணைந்து நீண்ட காலம் கிராமப்புற வளர்ச்சிக்கு செயல்பட வழி வகுக்கப்பட்டது.

குன்றக்குடி கிராமத் திட்டக்குழு அமைக்கப்பட்டு, ஒருங்கிணைந்த கிராமப்புற வளர்ச்சிக்கு திட்டமிடப்பட்டு, குன்றக்குடியில் கல்வி, பொருளாதார, சமூக மற்றும் சுகாதார மேம்பாடுகள் மலர்ந்ததை அனைவரும் அறிவோம். கூட்டுறவுத் தொழிற் கூடங்கள், வேளாண் மற்றும் தோட்டக்கலைப் பண்ணைகள், மீன் பண்ணைகள், கல்வி நிறுவனங்கள், மருத்துவமனை, கால்நடை மருத்துவமனை, வேளாண் அறிவியல் மையம், இளைஞர் மற்றும் மகளிர் மன்றங்கள் என்று பல நிறுவனங்கள் இன்றும் செயல்படுகின்றன.

குன்றக்குடி கிராமத் திட்டக்குழுவின் வெற்றிக்கு முக்கிய காரணம், அதனுடைய அணுகுமுறைகள் தான். இவற்றில் அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்தின் பங்கு சிறப்பானதாகும். நிரந்தரமான கிராம வளர்ச்சிக்கு இவை இரண்டும் அடிப்படையானவை என்ற கருத்து

1977 - லேயே முன்வைக்கப்பட்டது. (அந்தக் காலத்தில் அரசு சாதாரண குடிசைத் தொழில்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுத்தது என்பதை நினைவு கூறலாம்).

மற்றொன்று கிராமப் பொருளாதாரம் வேளாண் மற்றும் கால்நடை சார்ந்த தொழில்களின் வளர்ச்சி மூலம் தான் என்றும் நிலைக்கக் கூடியதாக இருக்கும் என்ற தொலைநோக்கையும் உடையதாக இருந்தது.

(அனைத்து விதமான சிறுதொழில்களும் திட்டமிடப்பட்டு குன்றக்குடியில் கொண்டுவரப்பட்டாலும் அது தற்காலிக வேலைவாய்ப்பையும், முன்னேற்றத்தையும் தான் கொடுக்க முடியும் என்று உணரப்பட்டது. இன்று சிறு தொழில்கள் பெருவாரியாக நலிந்திருப்பது இதன் உண்மையை வெளிக்கொண்டு விட்டது).

இதன் காரணமாக வேளாண் துறையில் நவீன தொழில் நுட்பங்கள் புகுத்தப்பட்டு உற்பத்தித் திறன் அதிகரிக்கப்பட்டது. சொட்டுநீர்ப் பாசனம், தெளிப்பான் போன்ற நீர் மேலாண்மைத் திட்டங்கள் புகுத்தப்பட்டன. தோட்டக்கலைக்கு முக்கியத்துவம் கொடுத்து மாதிரிப் பண்ணைகள் அமைக்கப்பட்டன. இதன் அடிப்படையில்தான் நேமத்தில் இன்றும் ஒரு பெரிய தோட்டக்கலைப் பண்ணை லாபகரமாகச் செயல்பட்டு வருகிறது. கால்நடை மற்றும் பறவைகள் வளர்ப்பில் புதிய தொழில் நுட்பங்களும் கருவூட்டும் முறைகளும், தொட்டில் கட்டி வளர்க்கும் முறைகளும் அறிமுகப்படுத்தப்பட்டன. நன்னீர் மீன் வளர்ப்பு, மீன் குஞ்சுகள் வளர்ப்பு ஆகியவை கூட்டுறவு சங்கங்கள் மூலமாக செயல்படுத்தப்பட்டன.

பட்டுப்பூச்சி வளர்ப்புக்கான மல்பரித் தோட்டங்கள் அமைத்து புழுக்கள் வளர்க்கும் முறை கொண்டுவரப்பட்டது. குன்றக்குடியில், கம்பனூரில் தரிசு நிலங்களில் இதற்கான தோட்டங்களும் குழுக்களும் அமைக்கப்பட்டன. 1977லிருந்து 1995-ஆம் ஆண்டுவரை இந்த பல்வேறு துறைகளில் அறிவியல் தொழில்நுட்பத்தால் தாக்கம் ஏற்பட்டது. இந்திய அளவில் "குன்றக்குடி மாதிரி கிராமம்" என்ற சிறப்புப் பெயரையும்

பெற்றதையும் நாம் அறிவோம். திட்டமிடப்பட்டவை பல பல. செயலாக்கப்பட்டது பல. அவற்றை பட்டியல் காட்டுவது இக்கட்டுரையின் நோக்கமில்லை.

நவீன அறிவியல் தொழில் நுட்பங்களை கிராமங்களும், கிராம மக்களும் அங்கீகரித்து பயன்பெற வழிகாட்டியாகவும், முன்நின்று செயல்படுத்துபவராகவும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் இருந்தார். அவர்களுடைய அறிவியல் தாகத்தை விஞ்ஞானிகளும் மற்றும் திட்டக்குழுவை சேர்ந்தவர்களும் ஓரளவுதான் தணிக்க முடிந்தது. அவர்களுடைய அறிவியல் வேட்கை விஞ்ஞானிகளைத் தூண்டி ஆய்வுக் கூடத்திலிருந்து நவீன கண்டுபிடிப்புகளை கிராமங்களுக்கு அறிமுகப்படுத்த செய்தது.

இந்தியாவிலுள்ள பல முக்கிய ஆய்வகங்களையும், பல்கலைக் கழகங்களையும் நேரில் பார்வையிட்டு கிராமப்புறங்களுக்கு ஏதுவான தொழில்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அப்படி சென்று பார்த்த ஆய்வகங்கள் : பிராந்திய ஆய்வு மையம், ஹைதராபாத் (இப்பொழுது இந்திய வேதியியல் தொழில் நுட்பக் கழகம் என்று பெயர் மாற்றப்பட்டுள்ளது), மத்திய தோல் ஆராய்ச்சி மையம், சென்னை, மத்திய உணவுத் தொழில் நுட்ப ஆராய்ச்சிக் கழகம், மைசூர் மத்திய உப்பு மற்றும் கடல் வேதியியல் பொருட்கள் ஆராய்ச்சிக் கழகம், பவநகர் (குஜராத்) மத்திய கண்ணாடி மற்றும் பீங்கான் ஆய்வகம், கொல்கத்தா டாடா கிராமி வளர்ச்சி மையம், ஜம்ஷெட்பூர், பிராந்திய ஆராய்ச்சிக் கழகம், திருவனந்தபுரம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. அஸ்ஸாம் மாநிலத்தில் உள்ள பிராந்திய ஆராய்ச்சிக் கழகத்திற்கு (ஜோர்ஹாட்) பிரயாண ஏற்பாடுகள் செய்யப்பட்டு, அங்கு நடந்து வந்த கலவரத்தால் ரத்து செய்யப்பட்டது.

வேளாண் கல்லூரி மதுரை, வேளாண் பல்கலைக்கழகம் கோயம்புத்தூர், கால்நடை அறிவியல் பல்கலைக்கழகம் சென்னை, காந்தி கிராமம் பல்கலைக் கழகம், டாக்டர் சுவாமிநாதன் ஆராய்ச்சி மையம் சென்னை ஆகியவைகளை வேளாண் மற்றும் தோட்டக்கலை சார்ந்த

தொழில்களுக்காக பார்வையிட்டார். மத்திய மூலிகைகள் மருத்துவச் செடிகள் ஆராய்ச்சிக் கழக விஞ்ஞானிகள் குன்றக்குடிக்கு அழைத்துவரப்பட்டு அது சம்பந்தமாக தொழில்கள் பற்றி ஆராயப்பட்டது.

மைசூர் மற்றும் சென்னையில் உள்ள முட்டை பல்ப் மற்றும் ட்யூப் லைட் தயாரிக்கும் தொழிலகங்கள் இராசபாளையத்தில் உள்ள மருத்துவப் பஞ்சு (சர்ஜிகல் காட்டன்) மற்றும் கட்டு போடுவதற்கான துணி (பேண்டேஜ் க்ளாத்) தயாரிக்கும் தொழிலகங்கள் நேரில் பார்வையிட்டு அந்த தொழில்கள் துவங்கும் சாத்தியக் கூறுகள் ஆராயப்பட்டு, வெற்றியூரில் பல்ப் தயாரிக்கும் தொழிலுக்கும், பிரான்மலையில் சர்ஜிகல் காட்டன் தயாரிப்புக்கான தொழிலுக்கும் அடிக்கல் நாட்டப்பட்டது.

இந்திய தொழில் நுட்ப நிறுவனம், சென்னை மற்றும் டில்லி இவர்களுடன் கிராமப்புற தொழில்களின் சாத்தியக்கூறு விவாதிக்கப்பட்டு சில தொழில்நுட்பங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன.

தவத்திரு அடிகளார் அவர்களின் இம்முன்னேற்றப் பணிகளைப் பற்றி ஓரளவு எல்லோருக்கும் தெரிந்திருக்கும். ஆனால் அறிவியல் தொழில் நுட்பங்களில் அவர்களுடைய ஆழ்ந்த ஈடுபாடு பற்றி எல்லோரும் அதிகம் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

மேலே குறிப்பிட்டுள்ள அனைத்து நிறுவனங்களுக்கும் அடிகளார் அவர்களுடன் செல்லும் வாய்ப்பைப் பெற்றேன். அடிகளார் அவர்கள் ஆய்வகங்களில் தங்களுடைய விவாதங்களால் ஏற்படுத்திய தாக்கத்தையும், அவர்கள் எந்த அளவிற்கு ஆய்வகத்தின் கண்டுபிடிப்புகளை அடிகளார் அவர்களுக்கு தந்து கிராம முன்னேற்றத்தில் பங்கு கொள்ள விரும்பினார்கள் என்பதையும் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பி இக்கட்டுரையைத் தொடங்கி உள்ளேன். அத்துடன் இது சாமானியர்களுக்கும் அடிகளார் அவர்கள் முயற்சிகள் ஊக்கமாக அமையும் என எண்ணுகிறேன்.

-(தொடரும்)

# மணிவாசகர் பதிப்பகத்தின்

## தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# நூல்வரிசை

7200 - பக்கங்கள் - 16 தொகுதிகள்

| | |
|---|---|
| திருக்குறள் - தொகுதி I | 75-00 |
| திருக்குறள் - தொகுதி II | 65-00 |
| திருக்குறள் - தொகுதி III | 100-00 |
| திருக்குறள் - தொகுதி IV | 75-00 |
| இலக்கியம் - தொகுதி V | 75-00 |
| இலக்கியம் - தொகுதி VI | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VII | 80-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VIII | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி IX | 75-00 |
| சமயம் - தொகுதி X | 90-00 |
| சமயம் - தொகுதி XI | 100-00 |
| சமயம் - தொகுதி XII | 125-00 |
| பொது - தொகுதி XIII | 140-00 |
| பொது - தொகுதி XIV | 125-00 |
| பொது - தொகுதி XV | 120-00 |
| பொது - தொகுதி XVI | 140-00 |

**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை
சென்னை - 600 108.

உ
சிவமயம்







தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
பழநி
பரிமள விலாஸ்
# S. சித்தநாதன்
ஜவ்வாது வாசனை விபூதி
&
ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
வாங்கி உபயோகியுங்கள்

Prop : S. சித்தநாதன் சன்ஸ்
அடிவாரம், பழநி – 624 601.

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!




**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

பதிவு எண் : TN/SP/KKD-01/2006-2008
மக்கள் சிந்தனை ஏப்ரல் / 2006. வெளியீட்டு நாள் 20-04-2006

*With Best Compliments from*

# HOTEL KARPAGAM INTERNATIONAL

**(Kundrakudi Adheena Building)**
**41, South Mada Street, Mylapore, Chennai - 600 004.**
**Phone : 24959987, 24959988 Grams : Best Hotel**

Location : In the heart of Mylapore, nearer to Sri Kapaleeswarar Temple, 30 minutes drive from Air Port, 20 minutes from Railway Station

22686.




## FACILITIES

- Well furnished rooms - A/c and Non A/c
- Spacious Car Parking.
- Courteous Room Service.
- 24 Hours STD / ISD Facilities.
- Express Laundry Service.
- KARPAGAM - A/c Restaurant Serving S. Indian, N. Indian, Tandoor and Chinese Food.
- KARPAGAM, Fast Food & Ice Cream Parlour.
- Karpagam Non A/c Restaurant Serving S. India Meals, Tiffin & Coffee.
- Tours and Travel Services.
- Marriage & Banquet Hall Facilities for 250 persons.

பெறுநர்

திரு ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர் - (Post)
காரைக்குடி - (Via)
அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166